உ
சிவமயம்.

# திருக்கைலாசம்.

திருக்கைலாசமென்பது பூலோகத்தில் உள்ள தொன்றன்று என்றும், அது ஒரு Fabulous mountain என்றும் பலர் சொல்லுகிறார்கள். அது பூலோகத்திலுள்ள ஒரு மலை யென்பதே நிச்சயம். தென் மதுரை, வடமதுரை என்றாற் போல, திருக்காளத்தி தென்கைலை எனப்படுவதால், வடகைலையும் பூமியிலேயே இருத்தல் வேண்டும். கந்தபுராணத்து மணம் பேசுபடலம், திருமணப்படலம் வழிநடைப் படலம் முதலிய படல சரித்திரங்களாலும், காளிதாஸன் இயற்றிய குமார சம்பவம் என்னும் நூலாலும் அது இமயமலைக்கு வடபாரிசத்தில் இருக்கின்றதென்று துணியப் படுகின்றது. அன்றியும் அகத்திய முனிவர் திருக்கைலாசத்தினின்று பொதியமலைக்கு வந்தனரென்னும் சரித்திரத்தாலும், அருச்சுனன் கைலாசத்துக்குப் போனான் என்னும் பாரதக் கதையாலும் திருமூலரென்னும் சிவயோகியார் திருக்கைலாசத்தினின்றும் தெற்கே பொதிய மலைக்கு அகத்தியரைக் காணவேண்டி வந்தாரென்னும் பெரிய புராணக் கதையாலும், சத்தியஞான தரிசனிகளுடைய மாணாக்கரும் மெய்கண்ட தேவருடைய குருவுமாகிய பரஞ்சோதி முனிவர் கைலாசத்தினின்று வந்தாரென்னும் கதையாலும், சுந்தரமூர்த்தி நாயனார் கைலாசத்துக்குப் போன கதையாலும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருக்காளத்தியலிருந்து கைலாசத்துக்குத் தேவார திருப்பதிகம் பாடிய திறத்தினாலும் நான் சொல்வதே உண்மையாகும். திருநாவுக்கரசு நாயனார் திருக்கைலாசத்தை தரிசிக்க விரும்பிக் காசிக்கு அப்பாலுள்ள தேசம் வரையும் போனாரென்னும் சரித்திரமொன்றே இதற்குப் போதிய சான்றாகும்.

Sven Hedin என்னும் ஐரோப்பிய ரொருவர் போன வருஷத்தில் தாம் இத்திருக்கைலாச * மலைக்குப் போய், அதனை வலஞ்சூழ்ந்து வந்ததாகச் சொல்லி யிருக்கிறார். மலையில் ஏறினேன் என்றும் அங்குள்ள நிகழ்ச்சிகள் இன்னவை யென்றும் அவர் சொல்லவில்லை.

---

* "கைலாசம் நசாந்யதா:" எனும் தேஜோபிந்தூப நிஷத்தால் ஈண்டுக் குறித்த கைலாசம் பிரகிருதிகைலாசம், அப்பிராகிருதகைலாசமன்று. இக் கைலாயம், முன்னுரைக்கப்பட்ட மேரு கைலாயத்திற்கு வேறாய், இமயகிரிக்கும் ஏமகூட கிரிக்கும் இடையிலுள தாய் விளங்கும் வெள்ளிமலை யென்பதையும்; அது விஷ்ணு முதலிய எல்லாப்பிராணிகளின் பிரளயகாலத்திற் சிவனாரது திருவாணையாலே விரைவில் வளர்ந்து பிரமாண்டத்தைப் பிளந்து மீச் சென்றிருக்கத்தக்க தென்பதையும் மஹாஸ் காந்தத்தின் தக்ஷகாண்டத்து 64 ம் அத்தியாயத்து 51, 52, 59-ஞ் சுலோகங்களினறிக. 41-ம் அத்தியாய த்து, 17, 18-ஞ் சுலோகங்களில் இக்கைலாயங்களுக்கு வேறாக மேருவுக்கு வடபாலாய், அண்டச்சுவரிற்கு அணித்தாய், மஹாகைலாஸபர்வத முளதென் பதும்; அஃது உபதேசகாண்டத்து 1-

வது அத்தியாத்தில் (40) நாற்பது கோடி யோசனை யுயரத்தையும், 11111118) கோடியே பதினோரிலக்கத்துப் பதி னோராயிரத்து நூற்றுப்பதினெட்டுச் சிகரங்களையும் முடைத்தென்பதும்; 2 - வது அத்தியாயத்து 19- ஞ் சுலேகத்தில் அஃது அவாந்தரப்பிரளய காலத்திலே அண்டத்திற்கு மேலாக வளரத்தக்கதென்பதும், 9-ஞ் சுலோகத்தில் இருவகைக் கைலாயமும் சிவனாரது திருவாணையாலே தாங்கப்பட்டிருப்பன வன்றிப் பூமியின் ஆதரவிலில்லையென்பதும் பெறுதும். இக்கைலாயங்கட்குப் பரமாகாசசிவலோகம் வேறாம். "ஷஷ்ட்யாமிந்தரஸ்ய ஸாயுஜ்யம்ஸப்தம் யாம் வைஷ்ணவம் பதம், அஷ்டம்யாம்வரஜதேருத்ரம்ப சூநாம் சபதிம்ததா, நவம்யாந்து மஹர்லோகம் தசம்யாந்து ஜநம்வ்ரஜேத், ஏகாதச்யாந்தபோலோகம்த் வாதச் யாம்ப்ரஹ்மசாச்வதம், தத: பரத்தரம் சுத்தம்வ்யாபகம்நிர்மலம்பரம், ஸதோதி தம்பரம்ப்ரஹ்மவீயோதிஷாமுதயோயத:, ஆதிந்திரிய குணாதீதம்மநோலீமம்ய தாபவேத் அநூபமம்சிவம்" (6-வதான இந்திர சாயுச்சியத்தின் மேலே, 7-வதானது வைகுண்டமெனும் விஷ்ணுபத மென்பதும், அ. வதாகவுளது கைலாச மெனும் உருத்திரபத பென்பதும், கூ - வது மகர்லோகம், 10-வது ஜந்லோகம், 11-வது தபோலோகம், 12-வது பிரஹ்மசாச்வதயென்பதும், அதன் மேலே எல்லாச் சிறப்புமுள்ளதாய் விசேஷமனோலயத்தில் வெளிப்படுவதாயுள்ள சிவம் ஒருபடித்தாயுள்ளது) என்ற ருக்வேதநாத பிந்தூபநிஷத்தால் அப்பிரா கிருதகைலாசம் என்பது எல்லாவுலகுமான பிரகிருதிநீங்கிய வெல்லையிலே யுள்ள சிவகதியாமென்பது தெள்ளிது.

---

அப்படியாயின், இந்திரக் கைலாசம் வெள்ளிமலையன்றோ அவருக்கும் அப்படித் தோன்றிற்றோ வெனின், - இது ஒரு வினாவன்று. இமயமலை பொன்மலையென்று சொல்லப்பட்டிருக்கின்றது. இப்போதும் அது அப்படித் தோன்றுகின்றதா? இல்லை. திருவண்ணாமலை பொன்மலை இரத்தின மலை யென்று சொல்லப்பட்டிருக்கின்றது. இப்போதும் அது அப்படித் தோன்றுகின்றதா? இல்லை. பொன்மலை வெள்ளிமலை யென்ற தெல்லாம் முந்திய யுகங்களிற் சங்கதிகள் என்க. கலியுகத்தில் எல்லா மலைகளும் கன் மலைகளாயே இருக்குமென்றறிக.

ஐரோப்பாவில் எத்தனையோபேர் யாவரும் அணுகுதற்கரிய வடதுருவம் தென்துருவ மென்பவைகளைக் காணத் துருவிச் செல்லுகிறார்கள், அதற்காக எத்தனை அரசர்கள் செல்வர்கள் பேருதவி செய்கி றார்கள். இத்திருக் கைலாசத்துக்குப் போகிறது அவ்வளவு அருமையன்று. இங்கிலீஷ் கற்றுவிட்டுச் சும்மா இருக்கிறவர்களுள் திடசரீர முடையவர் சிலர் சேர்ந்து இதனைப் போய்ப் பார்த்து வந்தால் எவ்வளவு புகழும் புண்ணியமுமாகும். அங்கே தாம் போகும் வரும் வழிகளிலே தான் உடம்பு நசிக்கினும் அதுவும் எல்லாருக்கும் கிடைத்தற் கரியதொரு பெரும் பேறன்றோ. நம்மவர்களால் போக இயலாதெனின் சீர்மையிலுள்ள Geographical Society யாரிடம் நாம் வேண்டிய திரவியங் கொடுத்தால், அவர்கள் அந்த வேலை செய்து தருவார்கள். இமயத்துக்கு வடக்கே இருஷிகள் பலர் இன்றைக்குந் தவஞ் செய்து கொண்டிருக்கிறார்களென்பது எமக்கும் Theosophical Society யாருக்கும் ஒத்த துணிவு. Sven Hedin என்பவரைப்போல நாம் அங்கே

போகலாம். போகக்கூடாத இடங்களுக்கு ஆகாயாதம் வைத்துக் கொள்ளலாம். S. Heden இம்மலையின் அருமை பெருமை அறியாதவராதலின், பார்த்தவளவிலே திரும்பிவிட்டனர். நம்மவர் போனால் எல்லா மறியலாம். சுவாமியே திருநாவுக்கரசு நாயனாபை அங்கே போதல் அருமை யென்று சொல்லித் திருப்பிவிட்டாரே யெனின். அது தமிழ் நாட்டார் உய்யும் பொருட்டு அவரைக்கொண்டு தேவாபப் பதிகம் அருளிச் செய்விக்கும் கருத்தினாலன்றிப் பிறிதொன்றினாலன்றென்க.

ஞானப்பிரகாசம்.

சித்தாந்தம் - 1914 ஷூ - டிசம்பர் மீ